# ஸ்ரீ மீனாக்ஷி பஞ்சரத்னம்

21/5

உரையாசிரியர்
Prof. C.G. வாசுதேவன்






செங்கச்சேரியாள்
வெளியீடு 4

உ

ஶ்ரீ

21/5

# ஸ்ரீ மீனாக்ஷி பஞ்சரத்னம்

(ஸ்ரீ சங்கர பகவத்பாதர் அருளியது)

உரையாசிரியர் :

**Prof. C.G. வாசுதேவன்**








வெளியீடு

செங்கச்சேரியாள் பதிப்பகம்

17, முதல் ஃபேஸ், சி.ஆர். ராமகிருஷ்ணாபுரம்,

விருகம்பாக்கம், சென்னை - 92.

போன் : 42 70 08

செங்கச்சேரியாள் வெளியீடு (4)



முதற்பதிப்பு - டிசம்பர் 1993

விலை: ரூ. 5/-

கணிப்பொறி ஒளி அச்சுக்கோப்பு
செங்கச்சேரியாள் பிரிண்டர்ஸ்
சென்னை -92

ஆப்செட் முறை அச்சு
எமரல்ட் அகடமிக் அச்சகம்
17 அரசமரம் மேற்குத் தெரு
சென்னை 600 029

21/5

# பதிப்புரை

ஸ்ரீஹாலாஸ்ய க்ஷேத்திரம் என்று, பெயர் கேட்டவர்க்கே முக்தி நல்கும் புகழ்வாய்ந்தது மதுரை மாநகரம். மலயத்துவச பாண்டிய னுக்காக அங்கு அவதரித்திருந்த தடாதகைப் பிராட்டியாரை, சிவபெருமான், சோமசுந்தரராய் எழுந்தருளி, திருமணம் புரிந்து கொண்ட புண்ணிய நகரம். சங்கம் அமைத்துத் தமிழ் வளர்த்த திருநகரம். இங்கு சியாமளாபீடத்தில் விளங்கி அருள்மழை பொழியும் அன்னை ஸ்ரீமீனாக்ஷிதேவி.

ஸ்ரீமீனாக்ஷியம்மன் பேரில் ஆதிசங்கரால் இயற்றப்பட்ட ஸ்ரீமீனாக்ஷி பஞ்சரத்னம் என்னும் ஸ்தோத்திரம் மிகவும் சக்தி வாய்ந்தது. தோஷங்களைப் போக்கி, குணநலன்களையும், செல்வ வளத்தையும் அருளவல்லது. வடமொழியில் இருக்கும் இந்த ஸ்தோத்திரத்தை அனைவரும் நன்கு பொருளுணர்ந்து பாராயணம் செய்யும் வகையில் **Prof.C.G. வாசுதேவன்** அவர்கள் தமிழில் உரை எழுதித்தந்துள்ளார். இந்த ஸ்தோத்திரத்தை அன்னாரது உரையுடன் வெளியிடுவதில் பெருமகிழ்ச்சியடைகிறோம்.

ஸ்ரீகுமரகுருபரஸ்வாமிகள் மீனாக்ஷியம்மை பிள்ளைத்தமிழ் இயற்றி, திருமலை நாயக்கர் அரசராக இருந்த போது, அரங்கேற்றினர். தம்பி குமாரகவி வாசிக்க, தினந்தோறும் ஒவ்வொரு பருவமாக அரங்கேற்றம் நடந்தது. வருகைப்பருவம் அரங்கேறிய தினத்தன்று, 'தொடுக்கும் கடவுட் பழம்பாடல்' என்று தொடங்கும் பாடலை வாசித்துப், பொருள் கூறுகையில், அங்கையற்கண் அம்மையே பெண்குழந்தையாக வந்து, திருமலை நாயக்கர் மடியில் அமர்ந்து, பாடலைக் கேட்டருளியதுடன், அரசர் கழுத்திலிருந்து முத்து மாலையைக்கழற்றி, ஸ்ரீகுமரகுருபரருக்கு அணிவித்து மறைந்ததாக வரலாறு கூறும். இன்னும், **மீனாக்ஷியம்மை குறம்**, **மீனாக்ஷியம்மை இரட்டை மணிமாலை** ஆகிய நூல்களையும் ஸ்ரீகுமரகுருபரர் இயற்றியுள்ளார். அங்கயற்கண்ணி அன்னையளை அருந்தரிசனம் அருளச் செய்த அந்தப்பாடலையும் இப்புத்தகத்தில் காணலாம்.

ஸ்ரீமீனாக்ஷியம்மன் அஷ்டோத்தர ஸதநாமாவளியையும் சேர்த்துள்ளோம். அன்பர்கள் இந்த ஸ்தோத்திரங்கள் மூலம் அன்னை ஸ்ரீமீனாக்ஷியின் அருளுக்குப் பாத்திரர்களாகும்படி பிரார்த்திக்கிறோம்.

குடந்தை சா. வேங்கடராமன்

# வருகைப்பருவம்

தொடுக்குங் கடவுட் பழம்பாடற்
றொடையின் பயனே நறைபழுத்த
துறைத்தீந் தமிழி னொழுகுநறுஞ்
சுவையே யகந்தைக் கிழங்கையகழ்ந்
தெடுக்குந் தொழும்ப ருளக்கோயிற்
கேற்றும் விளக்கே வளர்சிமய
இமயப் பொருப்பில் விளையாடு
மிளமென் பிடியே யெறிதரங்கம்
உடுக்கும் புவனங் கடந்துநின்ற
வொருவன் றிருவுள் ளத்திலழ
கொழுக வெழுதிப் பார்த்திருக்கும்
முயிரோ வியமே மதுகரம்வாய்
மடுக்குங் குழற்கா டேந்துமிள
வஞ்சிக் கொடியே வருகவே
மலயத் துவசன் பெற்றபெரு
வாழ்வே வருக வருகவே.

பெருந்தே னிறைக்கு நறைக்கூந்தற்
பிடியே வருக முழுஞானப்
பெருக்கே வருக பிறைமௌலிப் ,
பெம்மான் முக்கட் சுடர்க்கிடுநல்
விருந்தே வருக மும்முதற்கும்
வித்தே வருக வித்தின்றி
விளைக்கும் பரமா னந்தத்தின்
விளைவே வருக பழமறையின்
குருந்தே வருக வருள்பழுத்த
கொம்பே வருக திருக்கடைக்கண்
கொழித்த கருணைப் பெருவெள்ளங்
குடைவார் பிறவிப் பெரும்பிணிக்கோர்
மருந்தே வருக பசுங்குதலை
மழலைக் கிளியே வருகவே
மலயத் துவசன் பெற்றபெரு
வாழ்வே வருக வருகவே.

॥ श्रीः ॥

# ॥ मीनाक्षीपञ्चरत्नम् ॥

# ஸ்ரீ மீனாக்ஷி பஞ்சரத்னம்

उद्यद्भानु सहस्रकोटिसदृशां केयूरहारोज्ज्वलां
बिम्बोष्ठीं स्मितदन्तपङ्क्तिरुचिरां पीताम्बरालंकृताम् ।
विष्णुब्रह्मसुरेन्द्रसेवितपदां तत्वस्वरूपां शिवां
मीनाक्षीं प्रणतोऽस्मि संततमहं कारुण्यवारांनिधिम् ॥ १ ॥

உத்3யத்3பா4னு ஸஹஸ்ர கோடிஸத்3ருஸாம்
கேயூர ஹாரோஜ்ஜ்வலாம்
பி3ம்போ3ஷ்டீம் ஸ்மித த3ந்தபங்க்தி ருசிராம்
பீதாம்ப3ராலங்க்ருதாம்
விஷ்ணுப்3ரஹ்ம ஸுரேந்த்ர ஸேவித பதா3ம்
தத்வஸ்வரூபாம் ஸிவாம்
மீனாக்ஷீம் ப்ரணதோஸ்மி ஸந்ததமஹம்
காருண்ய வாராம் நிதி3ம்

உதயமாகிற ஆயிரம் கோடி சூர்யனுக்கு ஒப்பானவளும், கேயூரம், ஹாரம் இவற்றால் பிரகாசிக்கிறவளும், கோவைப்பழம் போன்ற உதட்டையுடையவளும், புன்சிரிப்புடன் கூடிய பல் வரிசையின் காந்தியையுடையவளும், பீதாம்பரத்தினால் அலங்கரிக்கப் பட்டவளும், விஷ்ணு, பிரம்மா, இந்திரன் இவர்களால் ஸேவிக்கப்பட்ட, பாதத்தையுடையவளும், தத்வஸ்வரூபியும், மங்களம் தருபவளும், கருணைக் கடலுமான ஸ்ரீ மீனாக்ஷியை எப்பொழுதும் நான் நமஸ்கரிக்கிறேன்.

மதுரையில் உள்ள ஸ்ரீ மீனாக்ஷி அருள் தருவதில் அதிக சக்தி வாய்ந்தவள். அழகியவள். மீனைப்போல கண்களுடையவள். ஒளியில் ஆயிரம் கோடி சூரியனுக்கு ஒப்பானவள். அனைத்து ஆபரணங்களும் அவளுக்கே உரியதாகும். ஆதலால் கேயூரத் தாலும், ஹாரத்தாலும் அலங்கரிக்கப்பட்டு இருக்கிறாள். அழகின் அணிகலமாக திகழ்கிறாள். சிவந்த உதடுகளும், புன்சிரிப்பும் அவளுடைய அழகை அதிகரிக்கின்றன. மஞ்சள் பட்டான பீதாம்பரத்தால் அலங்கரிக் கபட்டிருக்கிறாள். அம்பிகை பரம் பொருள். பீதாம்பரம் ஸ்ருஷ்டிப் பொருளைக் குறிக்கிறது. படைக்கும் கடவுளான பிரஹ்மா, காக்கும் கடவுளான விஷ்ணு, கர்மத்தில் ஊக்குவிக்கும் இந்திரன் இவர்கள் அனைவரும் அம்பாளின் அருளை வேண்டி ஸேவிக்கிறார்கள். மீனாக்ஷியின் பாதங்கள் அருளைத் தரும் அருவி. அமைதியையும், மங்களத்தை யும் உருவாகக் கொண்டதே அம்பிகையின் உடல். அவள் ஸ்வரூபம் பரமாத்ம ஸ்வரூபம் ; அழிவற்றது ; மாறாதது ; நிலை யானது ; நிரந்தரமானது. கருணைக்கு இருப்பிடமாகத் திகழ்கிறாள். அப்படிப்பட்ட மீனாக்ஷியை நாம் எப்பொழுதும் வணங்கு வோமாக.

* * *

मुक्ताहारलसत्किरीटरुचिरां पूर्णेन्दुवक्त्रप्रभां
शिञ्जन्नूपुरकिंकिणीमणिधरां पद्मप्रभाभासुराम्
सर्वाभीष्टफलप्रदां गिरिसुतां वाणीरमासेवितां ।
मीनाक्षीं प्रणतोऽस्मि संततमहं कारुण्यवारांनिधिम् ॥ २ ॥

முக்தா ஹார லஸத் கிரீட ருசிராம்
பூர்ணேந்து[3] வக்த்ர ப்ரபா[4]ம்
ஸிஞ் ஜந் நூபுர கிங்கிணீ மணித[4]ராம்
பத்[3]மப்ரபா[4] பா[4]ஸுராம்
ஸர்வாபீ[4]ஷ்ட பல ப்ரதா[3]ம் கி[3]ரிஸுதாம்
வாணீரமா ஸேவிதாம்

## மீனாக்ஷீம் ப்ரணதோஸ்மி ஸந்ததமஹம் காருண்ய வாராம் நிதி⁴ம்

முக்தா ஹாரத்தினால் பிரகாசிக்கிற கிரீடத்தினால் சோபிப்பவளும் பூர்ணச் சந்திரன் போன்ற முககாந்தியையுடையவளும் கலீரென்று சப்திக்கும் சிறிய சலங்கைகளைக் கொண்ட கால் கொலுசுகளை அணிந்தவளும், செந்தாமரைப் புஷ்பத்தின் காந்தியினால் பிரகாசிக்கிறவளும், அனைத்து கோரிக்கைகளின் பலனை அளிப்பவளும், மலைமகளும்; ஸரஸ்வதி, லக்ஷ்மி இவர்களால் ஸேவிக்கப்பெற்றவளும், கருணை கடலுமான ஸ்ரீ மீனாக்ஷியை நான் எப்பொழுதும் ஸேவிக்கறேன்.

வாழ்க்கை பக்குவமடைந்தால் ஆனந்தம் கிட்டும். பக்குவமடைந்த ஆனந்தத்தை ஹாரமாக கிரீடத்தில் தரித்திருப்பவள் மீனாக்ஷி. முழு நிலவு குளிர்ச்சியையும், அன்பையும் அள்ளி வீசும். மீனாக்ஷியின் முகமானது அப்படிப்பட்ட பொலிவு உடையது. குளிர்ந்த காந்தியையும் அளவிலா அன்பையும் பொழியும். அம்பாளின் நடையில் ஒய்யாரமும், அன்னத்தின் சாயலும் இருக்கும். லேசான மங்களமான ஒலி அவள் நடக்கும் பொழுது உண்டாகும். அவளுடைய நூபுரத்தில் சின்ன மணிகள் சதா ஒலித்துக்கொண்டு இருக்கும். வதனத்தில் மீனாக்ஷி செந்தாமரையைப் போன்றவள். முழு மலர்ச்சியை குறிப்பதும் செந்தாமரை. இது அனேக இதழ்கள் கொண்டது. உலகத்தில் உள்ள அனைத்து பொருள்களையும் இது குறிக்கும். இவ்வனைத்தையும் அம்பாள் மலர்ந்த கண்களுடன் அருளி வாழ்விக்கிறாள். அன்பு கனிந்த ச்ரத்தையுடனும், அறிவு கலந்த ஆற்றலுடனும் மீனாக்ஷியை வணங்கினால் அனைத்து கோரிக்கைகளையும் பரிபூர்ணம் ஆகும்படி செய்வாள். இவள் மலைமகள். கலைமகளாலும், அலைமகளாலும் ஸேவிக்கப் படுகிறாள். கல்வியும், செல்வமும் இவள் இடும் பிச்சைகள். கருணைக்கடலான அப்படிப்பட்ட மீனாக்ஷியை சதா த்யானம் செய்வோமாக.

* * *

श्रीविद्यां शिववामभागनिलयां ह्रींकारमन्त्रोज्ज्वलां
श्रीचक्राङ्कितबिन्दुमध्यवसतिं श्रीमत्सभानायकीम् ।
श्रीमत्षण्मुखविघ्नराजजननीं श्रीमज्जगन्मोहिनीं
मीनाक्षीं प्रणतोऽस्मि संततमहं कारुण्यवारांनिधिम् ॥ ३ ॥

ஸ்ரீ வித்3யாம் சிவவாம பா4க நிலயாம்
ஹ்ரீங்கார மந்த்ரோஜ் வலாம்
ஸ்ரீ சக்ராங்கித பி3ந்து3 மத்3ய வஸதிம்
ஸ்ரீமத் ஸபா4நாயகீம்
ஸ்ரீமத் ஷண்முக2 விக்3னராஜ ஜநநீம்
ஸ்ரீமஜ் ஜக3ன் மோஹிநீம்
மீனாக்ஷிம் ப்ரணதோஸ்மி ஸந்ததமஹம்
காருண்ய வாராம் நிதி4ம்

ஸ்ரீ வித்யா ரூபினியும், பரமசிவனது இடது பாகத்தில் வசிப்பளும், ஹ்ரீங்கார மந்த்ரத்தில் பிரகாசிப்பவளும், ஸ்ரீசக்ரத்தின் பிந்துவின் நடுவில் வசிப்பளும், ஸ்ரீ சித்சபை நாயகியும், ஸ்ரீமான்களான ஆறுமுகன், கணபதி இவர்களுக்குத் தாயும், ஜகத்தை மோஹிக்க செய்பவளும், கருணைக்கடலுமான ஸ்ரீ மீனாக்ஷியை நான் எப்போழுதும் நமஸ்கரிக்கிறேன்.

மீனாக்ஷி தேவி ஸ்ரீவித்யா ரூபினி. ஸ்ரீ என்றால் பராசக்தி. பராசக்தியின் வித்யை ஸ்ரீவித்யா ஆகும். பராசக்தி (ஸ்ரீ) ப்ராண சக்தியாகவும் இந்திரிய சக்தியாகவும், பகைவர்களை வெல்லும் திறமையாகவும், தேவர்களுடைய பிரகாசமாகவும், உலக வடிவாகவும், காலரூபினியாகவும், அனைத்தையும் வெல்லும் சக்தியாகவும் திகழ்கிறாள். அனைத்து வித்தைகளுக்கும் அதிபதியாக அம்பாள் விளங்குகிறாள்.

அம்பாளை அழகுமிக்கவளாகவும், அன்புமிக்கவளாகவும், அருள் மிக்கவளாகவும் குறித்தால் அவளே ஸ்ரீவித்யா. இந்த அம்பாள் பீஜ மந்திரங்களில் 'ஹ்ரீம்' மந்திரமாக ஜ்வலிக்கிறாள். சிவ தத்துவத்தின் இடது பக்கம் சக்தி தத்துவமாக இணைபிரியாமல் இவள் இருக்கிறாள். பிரம்ம வித்யையை அனுபவத்திற்கு கொண்டு வர வழிகாட்டுவது ஸ்ரீவித்தை. அனைத்து மதங்களின் ஸங்கம ஸ்தானம் ஸ்ரீவித்யை. இந்த அம்பாளே ஸர்வ-தேவ தேவி-ஸ்வரூபினி. பரதத்துவத்தைத் தாயாக வழிபடுவதே ஸ்ரீவித்தை. ஸ்ருஷ்டியானது ஸ்ரீசக்ர ரூபமாக இருக் கிறது. இதற்கு ஆதாரம் அம்பாள். இவள் அந்த சக்கரத்தின் மையத்திலிருந்து (பிந்துவில்) இந்த உலக படைப்பை நடத்துகிறாள். சித்சபையில் அனைத்து ஸ்ருஷ்டிக்கு உதவும் சக்திகள் தேவதைகளாக இருக்கிறார்கள். அவர்களின் நாயகியாக அம்பாள் இருக்கிறாள். இந்த அம்பாளின் புதல்வர்களாக ஸுப்ரமண்யரும், விநாயகரும் இருக்கிறார்கள். உலகத்தை ஆட்சி புரிந்து உயிரினங்களை மோஹிக்க செய்கிறவள் அம்பாள். கருணைக்கடலுக்கு இருப்பிடம் இவளே. அப்படிப்பட்ட அம்பாளை அனுதினம் வணங்கிப் போற்றுவோமாக.

* * *

श्रीमत्सुन्दरनायकीं भयहरां ज्ञानप्रदां निर्मलां
श्यामाभां कमलासनार्चितपदां नारायणस्यानुजाम् ।
वीणावेणुमृदङ्गवाद्यरसिकां नानाविधाडम्बिकां
मीनाक्षीं प्रणतोऽस्मि संततमहं कारुण्यवारांनिधिम् ॥ ४ ॥

ஸ்ரீமத் ஸுந்த³ர நாயகீம் ப⁴யஹராம்
ஞானப்ரதா³ம் நிர்மலாம்
ஸ்யாமாபா⁴ம் கமலாஸநார்ச்சித பதா³ம்
நாராயணஸ்யாநுஜாம்
வீணா வேணு ம்ருத³ங்க³ வாத்³யரஸிகாம்
நாநா விதா⁴டம்பி³காம்

## மீனாக்ஷீம் ப்ரணதோஸ்மி ஸந்ததமஹம் காருண்ய வாராம் நிதி³ம் !

ஸ்ரீ சுந்தரேச்வரரின் நாயகியும், பயத்தைப் போக்குகிறவளும், ஞானத்தை அளிப்பவளும், சுத்தமானவளும், கருத்த நிறமுள்ளவளும், ப்ரம்மாவினால் பூஜிக்கப்பட்ட பாதங்களுடையவளும், நாராயணனுக்கு சகோதரியும், வீணை, வேணு, ம்ருதங்க வாத்தியங்களை ரசிப்பவளும், நானாவிதமான ஆடம்பரத்துடன் கூடினவளும், கருணைக்கடலுமான மீனாக்ஷியை எப்பொழுதும் நமஸ்கரிக்கிறேன்.

மிகுந்த அழகுடன் காட்சி தந்த சிவபெருமானே சுந்தரேஸ்வரர். மீனாக்ஷி அவருடைய நாயகி ஆவார். இந்த அம்பாளை பக்தி சிரத்தையுடன் வழிபட்டால் பயத்தை நீக்கி, ஞானத்தை அருளுவாள். அப்பழுக்கற்றவள் அம்பாள். ஆதலால் அவளை பூஜிக்க அதிக சுத்தத்தைக் கடைபிடிக்க வேண்டும். இருளில் ஒளியாகவும், அஞ்ஞானத்தில் ஞானமாகவும், அழிவில் அழிவற்றவளாகவும், அம்பாள் இருக்கிறாள். படைப்புக் கடவுளாக இருக்கும் பிரம்மா அம்பாளை ஆராதித்து படைக்கும் சக்தியைப் பெறுகிறார். நாராயணனுக்கு சகோதரியாக இருந்து உலகைக் காத்து வருகிறாள் அம்பாள். ஸர்வமங்களங்களுக்கும் நாயகி அம்பாள். நரம்புக்கருவி, துளைக்கருவி, தோற்கருவி ஆகிய எல்லாவகையான வாத்தியங்களின் நாதங்களிலும் ரஸனை உடையவள் அம்பாள். நாதத்தின் நாயகி அம்பாள். வீணையை வாசிக்கும் ஸரஸ்வதிக்கு நாத ரஸனையை அளித்தவளே அம்பாள். கிருஷ்ண பகவானின் வேணுவில் இனிய ஒலியாக அம்பாள் இருக்கிறாள். மகாவிஷ்ணுவின் மத்தளத்தில் ஒலிமயமாக இருந்து உலகத்தை நாதத்தாலேயே வளரச்செய்கிறாள். அப்படிப்பட்ட மீனாக்ஷியை நாம் சதா போற்றுவோமாக.

नानायोगिमुनीन्द्रहृन्निवसतीं नानार्थसिद्धिप्रदां
नानापुष्पविराजिताङ्घ्रियुगलां नारायणेनार्चिताम् ।
नादब्रह्ममयीं परात्परतरां नानार्थतत्त्वात्मिकां
मीनाक्षीं प्रणतोऽस्मि संततमहं कारुण्यवारांनिधिम् ॥ ५ ॥

**நாநா யோகி[3] முனீந்த்[3]ர ஹ்ருன்னிவஸதிம்**
**நாநார்த்த[2] ஸித்தி[3]ப்ரதா[3]ம்**
**நாநா புஷ்ப விராஜிதாங்க்[4]ரியுக[3]லாம்**
**நாராயணே னார்ச்சிதாம்**
**நாத[3] ப்[3]ரஹ்ம மயீம் பராத்பரதராம்**
**நாநார்த்த தத்வாத்மிகாம்**
**மீனாக்ஷீம் ப்ரணதோஸ்மி சந்ததமஹம்**
**காருண்ய வாராம் நிதி[4]ம்**

அனைத்து யோகிகளின், முனிகளின் மனதில் வசிப்பவளும், விதவிதமாக புருஷார்த்த ஸித்தியை அளிப்பவளும், விதவிதமான மலர்களால் அலங்கரிக்கப்பட்ட பாதங்கள் உடையவளும், நாராயணனால் போற்றப்பட்டவளும், நாதமும், ப்ரஹ்மமும் உருக் கொண்டவளும், பரத்தைவிட உயர்ந்த பரதரமானவளும், அனைத்துப் பொருள்களின் ஆத்மாவாக இருப்பவளும், கருணைக்கடலுமான மீனாக்ஷியை எப்பொழுதும் நமஸ்கரிக்கிறேன்.

இல்லாததை அடைவது யோகம். கிடைக்காததை கிடைக்கச்செய்வது யோகம், தெரியாததைத் தெரியச்செய்வது யோகம், புரியாததைப் புரியச்செய்வது யோகம். பரம்பொருளை அடைய செய்வது யோகம். இத்தனையையும் ஸாதிப்பவன் யோகியாவான். மனதை ஒரு நிலைப்படுத்தி, ஒருமுகமாக்கி, பரம்பொருளில் நிலைக்கச்செய்து சதா த்யானத்தில் இருப்பவன் முனி. "மனன சீலவான் முனி" அப்படிப்பட்ட யோகிகளின், முனிகளின் மனதில் வாஸம் செய்பவளே மீனாக்ஷி. மாயையை உண்டுபண்ணுபவள் அவளே. அதை நீக்குபவளும் அவளே. யோகி மற்றும் முனிகளின் மனதிலிருந்து அவர்களுடைய மாயையை நீக்கி நித்ய தத்துவத்தைக் காட்டுகிறாள் அம்பாள்.

ஒவ்வொரு ஸித்தி பெறுவதற்கும் அவற்றிற்கேற்ற அனுஷ்டானங்களிருக்கின்றன. அந்தந்த அனுஷ்டானங்களை பக்தி சிரத்தையுடன் கடைபிடித்து அம்பாளை உபாசித்தால் அத்தனை ஸித்திகளையும் அருள்கிறாள் அம்பாள். ஆதலால் அவளை நாநார்த்த ஸித்தி ப்ரதாம் என்று சொல்கிறோம். மலர்களை மணக்கச்செய்வதின் தத்துவம் அம்பாளே. அவள் இரு பாதங்களையும் மலர்களால் அலங்கரிக்கச் செய்வதால் மலர்களுக்கு நறுமணம் கிடைக்கிறது. அம்பாள் சக்திமாதா படைப்புக்கு புகலிடம். படைப்புக்கு வேண்டிய ஞானத்தையும், சக்தியையும் தருபவள், ஆதலால் நாராயணனால் ஸதா போற்றப்படுகிறாள்.

அமபாளின் சக்தியே நாதமாக தோன்றி அக்ஷரங்களாக தோன்றி உலகத்தை ஸ்ருஷ்டி செய்து உய்விக்கிறது. ஆதலால் அவளே ப்ரஹ்மாவாகத் திகழ்கிறாள். எல்லா விதமான புருஷார்த் தங்களுக்கும் தத்துவமாக இருப்பவள். அனைத்து தத்துவத்துக்கும் இருப்பிடமாக அம்பாள் இருப்பதால், அவளை பராத்பரதராம் என்கிறார்கள். அப்படிப்பட்ட அம்பாளை வணங்கி மேன்மை பெறுவோமாக.

इति श्रीमत्परमहंसपरिव्राजकाचार्यस्य श्रीगोविन्दभगवत्पूज्यपादशिष्यस्य
श्रीमच्छंकरभगवतः कृतौ मीनाक्षीपञ्चरत्नं संपूर्णम् ।

இதி ஸ்ரீமத்பரமஹம்ச பரிவ்ராஜகாசார்யஸ்ய
ஸ்ரீகோ[3]விந்த[3]பகவத் பூஜ்யபாத சிஷ்யஸ்ய
ஸ்ரீமச்சங்கரபகவத : க்ருதௌ
மீனாக்ஷீபஞ்சரத்னம் ஸம்பூர்ணம்.

# ஸ்ரீ மீனாக்ஷியின்
# அஷ்டோத்ர ஸதநாமாவளி

### ஸ்ரீ ப்ரஹ்மவித்யாயை நம:

| | | | | |
|---|---|---|---|---|
| ओं मातङ्ग्यै | नमः | ஓம் மாதங்க்யை | நம: | |
| ,, विजयायै | ,, | ,, விஜயாயை | ,, | |
| ,, श्यामायै | ,, | ,, ச்யாமாயை | ,, | |
| ,, सचिवेश्यै | ,, | ,, ஸசிவேச்யை | ,, | |
| ,, शुकप्रियायै | ,, | ,, சுகப்ரியாயை | ,, | |
| ,, नीपप्रियायै | ,, | ,, நீபப்ரியாயை | ,, | |
| ,, कदंबेश्यै | ,, | ,, கதம்பேச்யை | ,, | |
| ,, मदाघूर्णितलोचनायै | नमः | ,, மதாகூர்ணிதலோசனாயை | நம: | |
| ,, भक्तानुरक्तायै | नमः | ,, பக்தாநுரக்தாயை | நம: | |
| ,, मन्त्रेश्यै | ,, | ,, மந்த்ரச்யை | ,, | 10 |
| ,, पुष्पिण्यै | ,, | ,, புஷ்பிண்யை | ,, | |
| ,, मन्त्रिण्यै | ,, | ,, மந்த்ரிண்யை | ,, | |
| ,, शिवायै | ,, | ,, சிவாயை | ,, | |
| ,, कलावत्यै | ,, | ,, கலாவத்யை | ,, | |
| ,, रक्तवस्त्रायै | ,, | ,, ரக்தவஸ்த்ராயை | நம: | |
| ,, अभिरामायै | ,, | ,, அபிராமாயை | நம: | |
| ,, सुमध्यमायै | नमः | ,, ஸுமத்யமாயை | நம: | |
| ,, त्रिकोणमध्य निलयायै | नमः | ,, த்ரிகோணமத்யநிலயாயை | நம: | |
| ,, चारुचन्द्रावतंसिन्यै | नमः | ,, சாருசந்த்ராவதம்ஸிந்யை | நம: | |
| ,, रहःपूज्यायै | नमः | ,, ரஹ: பூஜ்யாயை | நம: | 20 |
| ,, रहःकेल्यै | ,, | ,, ரஹ: கேள்யை | ,, | |
| ,, योनिरूपायै | ,, | ,, யோநிரூபாயை | ,, | |
| ,, महेश्वर्यै | ,, | ,, மஹேச்வர்யை | ,, | |
| ,, भगप्रियायै | ,, | ,, பகப்ரியாயை | ,, | |
| ,, भगाराध्यायै | ,, | ,, பகாராத்யாயை | ,, | |
| ,, सुभगायै | ,, | ,, ஸுபகாயை | ,, | |
| ,, भगमालिन्यै | ,, | ,, பகமாலிந்யை | ,, | |
| ,, रतिप्रियायै | ,, | ,, ரதிப்ரியாயை | ,, | |

| | | |
|---|---|---|
| ,, चतुर्बाहवे ,, | ,, சதுர்பாஹவே ,, | |
| ,, सुवेण्यै ,, | ,, ஸுவேண்யை ,, | 30 |
| ,, चारुहासिन्यै ,, | ,, சாருஹாஸின்யை நம: | |
| ,, मधुप्रियायै ,, | ,, மதுப்ரியாயை ,, | |
| ,, श्रीजनन्यै ,, | ,, ஸ்ரீஜநந்யை ,, | |
| ,, शर्वाण्यै ,, | ,, சர்வாண்யை ,, | |
| ,, शिवात्मिकायै ,, | ,, சிவாத்மிகாயை ,, | |
| ,, राज्यलक्ष्मी प्रदायै नमः | ,, ராஜ்யலக்ஷ்மீப்ரதாயை நம: | |
| ,, नित्यायै नमः | ,, நித்யாயை நம: | |
| ,, नीपोद्यान निवासिन्यै नमः | ,, நீபோத்யாநநிவாஸிந்யை நம: | |
| ,, वीणावाद्यै नमः | ,, வீணாவாத்யை நம: | |
| ,, कंबुकण्ठ्यै ,, | ,, கம்புகண்ட்யை ,, | 40 |
| ,, कामेश्यै ,, | ,, காமேச்யை ,, | |
| ,, यज्ञरूपिण्यै ,, | ,, யக்ஞரூபிண்யை நம: | |
| ,, संगीत रसिकायै नमः | ,, ஸங்கீதரஸிகாயை நம: | |
| ,, नादप्रियायै नमः | ,, நாதப்ரியாயை நம: | |
| ,, नीलोत्पलद्युत्यै नमः | ,, நீலோத்பலத்யுத்யை நம: | |
| ,, मातङ्गतनयायै नमः | ,, மாதங்கதநயாயை ,, | |
| ,, लक्ष्म्यै ,, | ,, லக்ஷ்ம்யை ,, | |
| ,, व्यापिन्यै ,, | ,, வ்யாபின்யை ,, | |
| ,, सर्वरञ्जन्यै नमः | ,, ஸர்வரஞ்ஜந்யை ,, | |
| ,, दिव्यचन्दन दिग्धांगै नमः | ,, திவ்யசந்தனதிக்தாங்கை நம: | 50 |
| ,, यावकार्द्रपदांबुजायै ,, | ,, யாவகார்த்ரபதாம்புஜாயை நம: | |
| ,, कस्तूरीतिलकायै नमः | ,, கஸ்தூரீதிலகாயை நம: | |
| ,, सुभ्रुवे ,, | ,, ஸுப்ருவே நம: | |
| ,, बिंबोष्ठ्यै ,, | ,, பிம்போஷ்ட்யை நம: | |
| ,, मदालसायै ,, | ,, மதாலஸாயை ,, | |
| ,, विद्याराज्ञ्यै ,, | ,, வித்யாராக்ஞை ,, | |
| ,, भगवत्यै ,, | ,, பகவத்யை ,, | |
| ,, सुधापनानुमोदिन्यै ,, | ,, ஸுதாபாநாநுமோதிந்யை நம: | |
| ,, शंखताटङ्किन्यै ,, | ,, சங்கதாடங்கிந்யை நம: | |
| ,, गुह्यायै ,, | ,, குஹ்யாயை நம: | 60 |
| ,, योषित्पुरुष मोहिन्यै ,, | ,, யோஷித்புருஷமோஹிந்யை நம: | |
| ,, किंकरीभूतगीर्वाण्यै ,, | ,, கிங்கரீபூதகீர்வாண்யை நம: | |
| ,, कौलिन्यै ,, | ,, கௌளிந்யை நம: | |

| | | |
|---|---|---|
| ,, अक्षररूपिण्यै ,, | ,, அக்ஷரரூபிண்யை நம: | |
| ,, विद्युत्कपोलफलकायै ,, | ,, வித்யுத்கபோலபலகாயை நம: | |
| ,, मुक्तारत्न विभूषितायै ,, | ,, முக்தாரத்ன விபூஷிதாயை நம: | |
| ,, सुनासायै ,, | ,, ஸுநாஸாயை நம: | |
| ,, तनुमध्यायै ,, | ,, தநுமத்யாயை ,, | |
| ,, श्रीविद्यायै ,, | ,, ஸ்ரீவித்யாயை ,, | |
| ,, भुवनेश्वर्यै ,, | ,, புவனேச்வர்யை நம: | 70 |
| ,, प्रथुस्तन्यै ,, | ,, ப்ரதுஸ்தன்யை ,, | |
| ,, ब्रह्मविद्यायै ,, | ,, ப்ரஹ்மவித்யாயை நம: | |
| ,, सुधासागर वासिन्यै ,, | ,, ஸுதாஸாகரவாஸிந்யை நம: | |
| ,, अनवद्याङ्ग्यै ,, | ,, அநவத்யாங்க்யை நம: | |
| ,, यन्त्रिण्यै ,, | ,, யந்த்ரிண்யை நம: | |
| ,, रतिलोलुपायै ,, | ,, ரதிலோலுபாயை நம: | |
| ,, त्रैलोक्य सुन्दर्यै ,, | ,, த்ரைலோக்ய ஸுந்தர்யை நம: | |
| ,, रम्यायै ,, | ,, ரம்யாயை நம: | |
| ,, स्रग्विण्यै ,, | ,, ஸ்ரக்விண்யை நம : | |
| ,, कीरधारिण्यै ,, | ,, கீரதாரிண்யை ,, | 80 |
| ,, आत्मैकसुमुखीभूत जगदाह्लादकारिण्यै ,, | ,, ஆத்மைகஸுமுகீபூத ஜக தாஹ்லாதகாரிண்யை நம: | |
| ,, कल्पातीतायै ,, | ,, கல்பாதீதாயை நம: | |
| ,, कुण्डलिन्यै ,, | ,, குண்டலிந்யை ,, | |
| ,, कलाधरायै नमः | ,, கலாதராயை நம: | |
| ,, मनस्विन्यै ,, | ,, மநஸ்விந்யை ,, | |
| ,, अचिन्त्यानन्दविभवायै नमः | ,, ஆசிந்த்யாநந்தவிபவாயை நம: | |
| ,, रत्नसिंहासनेश्वर्यै ,, | ,, ரத்னஸிம்ஹாஸநேச்வர்யை ,, | |
| ,, पद्मासनायै ,, | ,, பத்மாஸநாயை நம: | |
| ,, कामकलायै ,, | ,, காமகலாயை நம: | 90 |
| ,, स्वयंभूकुसुमप्रियायै ,, | ,, ஸ்வயம்பூகுஸுமப்ரியாயை நம: | |
| ,, कल्याण्यै ,, | ,, கல்யாண்யை நம: | |
| ,, नित्यपुष्पायै ,, | ,, நித்யபுஷ்பாயை நம: | |
| ,, शांभव्यै ,, | ,, சாம்பவ்யை நம: | |
| ,, वरदायिन्यै ,, | ,, வரதாயிந்யை நம: | |
| ,, सर्वविद्याप्रदायै ,, | ,, ஸர்வவித்யாப்ரதாயை நம: | |
| ,, वाच्यायै ,, | ,, வாச்யாயை நம: | |

,, गुह्योपनिषदुत्तमायै ,, ,, குஹ்யோபநிஷதுத்தமாயை நம:
,, नृपवश्यकर्यै ,, ,, ந்ருபவச்யகர்யை நம:
,, भोक्त्र्यै ,, ,, போக்த்ர்யை நம:
,, जगत्प्रत्यक्षसाक्षिण्यै ,, ,, ஜகத்ப்ரத்யக்ஷஸாக்ஷிண்யை நம: 100
,, ब्रह्मविष्णवीशजनन्यै ,, ,, ப்ரஹ்மவிஷ்ணவீசஜநந்யை நம:
,, सर्वसौभाग्यदायिन्यै ,, ,, ஸர்வஸௌபாக்யதாயிந்யை நம:
,, गुह्यातिगुह्यगोप्त्र्यै ,, ,, குஹ்யாதிகுஹ்யகோப்த்ர்யை நம:
,, नित्यक्लिन्नायै ,, ,, நித்யக்லிந்நாயை நம:
,, अमृतोद्भवायै ,, ,, அம்ருதோத்பவாயை நம:
,, कैवल्यदात्र्यै ,, ,, கைவல்யதாத்ர்யை நம:
,, वशिन्यै ,, ,, வசிந்யை நம:
,, सर्वसंपत्प्रदायिन्यै ,, ,, ஸர்வஸம்பத்ப்ரதாயிந்யை நம:
,, श्रीब्रह्मविद्यायै ,, ,, ஸ்ரீப்ரஹ்மவித்யாயை நம:
,, श्यामळांबिकायै ,, ,, ச்யாமளாம்பிகாயை நம:
,, भवस्यदेवस्यपत्न्यै ,, ,, பவஸ்யதேவஸ்யபத்ந்யை நம:
,, शर्वस्यदेवस्यपत्न्यै ,, ,, சர்வஸ்யதேவஸ்யபத்ந்யை ,,
,, ईशानस्यदेवस्यपत्न्यै ,, ,, ஈசாநஸ்யதேவஸ்யபத்ந்யை ,,
,, पशुपतेर्देवस्यपत्न्यै ,, ,, பசுபதேர்தேவஸ்யபத்ந்யை ,,
,, उग्रस्यदेवस्यपत्न्यै नमः ,, உக்ரஸ்யதேவஸ்யபத்ந்யை நம:
,, रुद्रस्यदेवस्यपत्न्यै ,, ,, ருத்ரஸ்யதேவஸ்யபத்ந்யை ,,
,, भीमस्यदेवस्यपत्न्यै ,, ,, பீமஸ்யதேவஸ்யபத்ந்யை ,,
,, महतोदेवस्यपत्न्यै ,, ,, மஹதோதேவஸ்யபத்ந்யை ,,

ओं श्री ललितामहात्रिपुरसुन्दरी स्वरूप

श्रीमीनाक्षी परमेश्वरी परदेवताम्बिकायै नमः

ஓம் ஸ்ரீலலிதாமஹாத்ரிபுரஸுந்தரீ ஸ்வரூப

ஸ்ரீமீனாக்ஷீபரமேச்வரீ பரதேவதாம்பிகாயை நம:

## ஸ்ரீ சக்ர ராஜம்



श्रीचक्रराजनिलया श्रीमत्त्रिपुरसुन्दरी ।
श्रीशिवा शिवशक्त्यैक्यरूपिणी ललिताम्बिका ॥


செங்கச்சேரியாள் பதிப்பகம்
17/ L & T காலனி, முதல் ஃபேஸ்,
சி.ஆர். ராமகிருஷ்ணாபுரம், சென்னை - 92.
போன் : 42 70 08